பெரும் பகுதியான் கடன் பத்திர மார்க்கெட் கூடிய வரை ஸ்திரமாகவே இருந்து வந்திருக்கிறது. 1951 நவம்பரில் பாங்கு ரேட்டும் உயர்த்தப்பட்ட போது விலைகள் நிலைகொண்டு பண்ணப்பட்டது; சர்க்காரின் ஆதரவு அடியோடு அற்றுப் போகும் என்ற பயத்தில் ஸ்திரமின்மை ஒன்றும் மோசமாயிற்று. இதனால் அதன் மதிப்பு மறுபடி இறங்கியது அபிவிருத்தி ஏற்பட்டது; விலைகள் இன்னமும் 1951-ம் வருஷத்தின் ஆரம்பத்தில் இருந்ததைவிடப் பெரும் குறைவாகவே இருந்து வருகின்றனவென்றாலும், அபிவிருத்தி இல்லாமல் போகவில்லை. உணவுக் கவலை: உணவு நிலைமை பெரும் கவலைக்கிடமானதாகவே இருந்து வந்திருக்கிறது. கட்ச், ராஜஸ்தான், அஜ்மீர், ஆகிய ராஜ்யங்களிலும், பம்பாய், ஹைதராபாத், மத்திய பாரத், மத்தியப் பிரதேசம் இவற்றின் பகுதிகளிலும் முன்கால பயிர்களுக்கும், கோடைப் பயிர் விளைவுக்கும் பலத்த சேதம் ஏற்பட்டது. சென்னையிலும், ஹைதராபாத்திலும் மழை போதிய அளவு பெய்யவில்லை. பீஹார், பஞ்சாப் ராஜ்யங்களின் சில பகுதிகளில் வறட்சி ஏற்பட்டது. இப்படி பயிர்கள் சேதமடைந்து போனதென்று, முதலில் தயாரிக்கப் பட்ட மகசூல் மதிப்பீடுகள் அனைத்தும் மிஞ்சி அவற்றைக் காட்டிலும் குறைவு என்று ஒருகால் பின்னர் தெரியவரலாம். ஆனாலும் அந்த நிலைமையின் காரணமாக வருகிற வருஷத்தில் கணிசமான உணவுத் தானிய இறக்குமதிக்கு திட்டமிடுவது அவசியமாயிற்று. தொழில் உற்பத்தி: சில அத்தியாவசியமான மூலப் பொருள்களை திரட்டுவதில் கஷ்டம் ஏற்பட்டிருந்த போதிலும் பம்பாயில் மின்சார சப்ளை குறைக்கப் பட்டிருந்த போதிலும் 1951-ம் வருஷத்தில் தொழில் உற்பத்தி குறிப்பிடத்தக்க அளவு அபிவிருத்தியடைந்திருக்கிறது. சணல் உற்பத்தி 1950-ம் வருஷத்தின் நிலைமையைவிட சற்று அதிகமாகி 876000 டன்னாக உயர்ந்தது. 1950ல் 36,14 லட்சமாக இருந்த பருத்தி நூல் உற்பத்தி சுமார் 40,80 லட்சம் கெஜமாக உயர்ந்தது. மில்கள் மேற்கொண்டு 8000 லட்சம் கெஜம் உற்பத்தி செய்தன. நிலக்கரி சிமெண்ட் இவற்றின் உற்பத்திகள் புதிய உச்ச அளவை எட்டின; நிலக்கரி உற்பத்தி 340 லட்சம் ஆயிற்று. அதாவது 20 லட்சம் டன் அதிகமாயிற்று. சிமெண்ட் 35 லட்சம் டன்னுக்குச் சற்று அதிகமாக உற்பத்தியாயிற்று. அதாவது முந்தின வருஷத்தைக் காட்டிலும் 8 லட்சம் டன் அதிகமாயிற்று. உப்பு, சர்க்கரை இவற்றின் உற்பத்தியும் உயர்ந்தது. உப்பு 10 லட்சம் டன்னும் சர்க்கரை 11 லட்சம் டன்னும் உற்பத்தியாயின. மின்சார சாமான்கள், ரப்பர் சாமான்கள், டீசல் இயந்திரங்கள், சக்தியால் இயங்கும் பம்புகள், காஸ்டிக் சோடா, சோடா, ஆஷ் இவை எல்லாவற்றின் உற்பத்தியுமே முந்தின வருஷத்தைக் காட்டிலும் அபிவிருத்தி அடைந்திருக்கிறது. ரேயான் உற்பத்தி, யந்திரக் கருவிகள், பாவுதோய் யந்திரங்கள், அலுமினியப் பொடி ஆகியவைப் போன்ற புதிய தொழில்களும் 1951ல் ஆரம்பிக்கப்பட்டிருக்கின்றன. விவசாய உற்பத்தி: விவசாய உற்பத்தியில் நல்ல அபிவிருத்தி இருந்திருக்கிறது. ஆனாலும் மழை சரியாகப் பெய்யாமல் போனதனால், இந்த அபிவிருத்தி அழுங்கப்பட்டுப் போய்விட்டது. சர்க்காரால் அனுமதிக்கப்பட்ட உணவுப் பெருக்கத் திட்டங்களால் மேற்கொண்டு 14 லட்சம் டன் உணவு கிடைக்குமென்று கணக்கிடப்பட்டது. பாதிக்கப்பட்டமான பகுதிகளை அனுசரித்து கணக்கிட்டுப் பார்த்தாலும் கூட அதிகப்படியாய் எதிர்பார்க்கப்படும் உற்பத்தி லட்சிய அளவைக் காட்டிலும் அதிகமாய்க் குறைந்துவிடாது என்று தோன்றுகிறது. சென்ற வருஷத்தில் 29 லட்சம் பேலாக இருந்த உள்நாட்டுப் பருத்தி உற்பத்தி இந்த வருஷத்தில் 34 லட்சம் பேலாக இருக்கும் என்று கணக்கிடப்பட்டது. சணல் உற்பத்தியிலும் கூட அதிகப்படியாய் 14 லட்சம் பேல் கிடைக்குமென்று எதிர்பார்க்கப்படுகிறது. தொழில் உறவு: தொழில் உறவு விஷயத்திலும் ஸ்தாபன வருஷத்தில் ஒரு நியாயமான அபிவிருத்தி இருந்துவந்திருக்கிறது. தற்போது மத்தியஸ்தத்தில் இருந்துவரும் பாங்கு சிப்பந்திகள் சம்பந்தமான தகராறைத் தவிர பெரியத் தொழில் தகராறு ஒன்றும் ஏற்படவில்லை. 1950ல் 128 லட்சம் ஆள் தினங்கள் நஷ்டமானதற்குப் பதிலாக, 1951-ம் வருஷத்தின் முதல் 9 மாதங்களில் சுமார் 30 லட்சம் ஆள்-தினங்கள்தான் நஷ்டமாயின. தொழிலாளருக்கும், நிர்வாகஸ்தர்களுக்கும் இடையில் சுமுகமான உறவு இருந்து வந்திருக்கிறது என்பதை இது காட்டுகிறது. இதிலிருந்து 1950-ல் அடைந்த உற்பத்தி அளவை மேற்கொண்டும் அடையலாம் என்று எண்ண இடமிருக்கிறது. பல தொழில்கள் இன்னமும் அவற்றின் பூரண உற்பத்தி சக்திக்கு குறைவாகவே வேலை செய்கின்றன. பூரண சக்தியை பயன்படுத்துவது மூலப்பொருள்கள் அதிகமாய் கிடைப்பதைப் பொறுத்திருக்கிறது. சர்வதேச மூலப்பொருள்கள் மகாநாட்டில் இந்தியா பங்கெடுத்துக் கொண்டதினால்; கந்தகம், அலுக்கலப்பில்லாத உலோகங்கள் போன்ற சாமான்களை இறக்குமதி செய்வதில் உள்ள கஷ்டங்கள் குறைந்திருக்கின்றன. பாகிஸ்தானுக்கு மீண்டும் வியாபார ஏற்பாடுகள் ஆரம்பித்ததனாலும் அந்த நாட்டோடு செய்துகொண்ட வியாபார ஒப்பந்தத்தினாலும், சணல் தொழில் பயன் அடைந்திருக்கிறது. எதிர்பாராத நெருக்கடி ஏதேனும் நடக்காவிட்டால் 1951-ல் உற்பத்தியான அளவுக்கு மேற்கொண்டு உற்பத்தி செய்யமுடியும் என்று எதிர்பார்ப்பதற்கு இடமிருக்கிறது. அந்நிய நாட்டு செலாவணி நிலைமை: வருஷம் முழுவதும் அந்நிய நாட்டு செலாவணி நிலைமை (பணம் பட்டுவாடா) கணிசமான அளவு பற்றுக்குறை ஏற்படக்கூடுமென்று எதிர்பார்க்கப்படுகிறது. இதை வரும்பத்தகுந்ததொரு நிலைமையெனக் கருதி விடுவதற்கில்லை. ஏனெனில், இந்தப் பற்றுக் குறையால் ரூ 50/- கோடியாவதிலிருந்து ரூ 60/- கோடி வரை சமீபத்தில் செய்துகொள்ளப்பட்ட ஸ்டெர்லிங் நிலுவை ஒப்பந்தத்தின் கீழ் ஏற்படப்போவதாகும். இவ்வாறு பற்றுக்குறை ஏற்படும் தொகையின் இறுதி மதிப்பு என்னவென்பது இன்னமும் தெரியவில்லை. ஆனாலும், ரிசர்வ் பாங்கு வசமிருந்த ஸ்டெர்லிங் நிலுவைகளில் ரூ 53/- கோடி குறைந்துவிட்டதிலிருந்து இந்தப் பற்றுக்குறையின் அளவை ஒருவாறு அனுமானித்துக்